# ஓர் இவள்

மஞ்சம்மாவுடன் பத்து வருஷம், குப்பை கொட்டியாகிவிட்டது. அவளை அவனால் புரிந்துகொள்ள முடியலைதான்.

'ஏட்டீ அப்பாவை எழுப்பு'

அவளென்ன காடிப் பலகைக்குள் விழுந்த மாட்டை மோக்கால் கொடுத்து எழுப்புகிறமாதிரி எழுப்பப்போகிறாளா!

அரை நிமிஷங்கூட ஆகாது. வாழைத்தண்டுபோல் குளிர்ந்த கைகளால் தொட்டு, 'என்ன, இன்னுமா தூக்கம்?' என்ற குசுகுசுத்த குரலில் கேட்டாலே போதுமே.

கலியாணமான புதுசில் மாமனார் வீட்டில் 'மூணுமாச விருந்'தின் போது.... அடடா, சொர்க்கத்துக்கு மூணுமாசம்தான் 'லிமிட்' போலிருக்கிறது.

கோடையானால் ஜிலுஜிலுப்பும் குளிரானால் வெதுவெதுப்பும் கொண்ட அந்த சயனத்துணை, இளங்காலையின்போது விழித்துப் பார்த்தால் பக்கத்து தலையணை வெறுமையாக இருக்கும். தூங்கி விட்ட குழந்தையின் அணைப்பிலிருந்த பொம்மையை விடுவிக்கும் 'ஜாலக்'கைப் போலிருக்கும் அந்தக் காரியம்! அணைப்புக்கு அல்லாடும் இளங்காலையில் தொகுப்பில்லாத ஊமைக்கனவுகள் வந்துபோய்க் கொண்டிருக்கும்போது, கழுத்தடியில் வந்து கிச்ச மூட்டும் சில்லிடும் அல்லிக்கரம். அந்தக் கரங்கள் இப்பொழுது எங்கே போயின என்று அவன் மனது ஏங்கித் தவித்தது.

## 1

இப்பொழுது–

எதில் அவன் மனம் லயித்தாலும் அதுக்கு ஒருவகை எதிர்ப்பு இருக்கும் அவளிடம்; அந்த எதிர்ப்பு அந்த சமயத்துக்குத் தக்கபடியும் மனோலயத்துக்குத் தக்கபடியும் இருக்கும்.

வீட்டில் எலிகள் தொந்தரவு அதிகமாக இருந்தது. ஒரு பூனையை வளர்ப்பது என்று இருவரும் தீர்மானித்தார்கள். சொல்லப்போனால் பூனை விஷயத்தை தூண்டியவளே அவள்தான்.

மூணாம் நாள் அவன் ஒரு நண்பன் வீட்டிலுள்ள ஒரு பூனைக் குட்டியைப்பற்றிப் பிரஸ்தாபித்தான். அவள் அதை முகத்தில் மகிழ்ச்சி காட்டி வரவேற்றாள். அது சாப்பாட்டு வேளை. குழந்தைகளும் ஆவலோடும் குதூகலத்தோடும் கேட்டுக் கொண்டிருந்தன. அவன்

உடனே அந்தப் பூனைக்குட்டியின் அழகுபற்றி வர்ணிக்கத் தொடங்கினான்.

'நாமெல்லாம் பச்சை நிறப் பூனைக்கண்தானே பாத்திருக்கோம். ஆனா இதோட கண்ணிருக்கே நீலநிறம். நீலநிறம்ண்ணா எப்படி இருக்கிங்கே. அடேயப்பா. என்ன கனிவான நீலம்! அப்பிடி ஒரு நீலக்கல் மட்டும் இருக்குமானா உலகமே போட்டிபோடும் அதை அடையிறதுக்கு.'

சின்னவன் கேட்டான் ஆசையோடு. 'அதோட ஒடம்பு என்ன நிறம்?' இதைக் கேட்டதும் உடனே வெங்கிட்டி சிணுங்கினாள். இந்தக் கேள்வியை அப்பாவிடம் அவள் கேட்கவேண்டுமென்று நினைத் திருந்தாள்!

'அதைத்தான் நான் இப்போ சொல்ல வாரேன். சுத்தமான வெல் வெட் கருப்பு நிறம். மொழுமொழுண்ணு பாக்கப் பாக்க ஆசையா இருக்கும்.'

பளிச்சென்று வெங்கிட்டி சொன்னாள் 'ஐயோ நா அதை இப்பவே பாக்கணுமே.' அவள் உடம்பைச் சுருக்கி நெளித்துக்கொண்டு சொன்ன தினுசு எல்லோரையும் சிரிக்க வைத்தது. வெட்கத்தினால் அவள் அப்பாவின் மடியில் தலையைப் புதைத்துக்கொண்டாள்.

'பால்குடி மறக்கட்டும் நாமே அதைச் சீக்கிரம் நம்ம வீட்டுக்கு கொண்டாந்திருவோம்.'

குழந்தைகள் பூனைக்குட்டியைப் பற்றிய கற்பனைகளில் அதே நிமிஷத்தில் மூழ்கத் தொடங்கின. சாப்பாட்டில் தேக்கம் கண்டது.

மஞ்சம்மா குழந்தைகளைச் சாப்பிடச் சொல்லி வற்புறுத்தினாள். அவர்களோ அதைச் சிறிதும் சட்டை செய்யாமல் கேள்விகளால் தகப்பனாரைத் துளைத்தெடுத்தார்கள். மஞ்சம்மா புருஷனைக் கண்டித்தாள். 'உங்களுக்கு எப்போ எது சொல்றதுண்ணு தெரியாது.'

'இது என்ன அநியாயம்!' என்று நினைத்தான் அவன்.

## 2

பூனைக்குட்டி வந்த அன்று வீடே திமிலோகப்பட்டது. முதல் முதலில் மஞ்சம்மாவே பால் வார்க்கட்டும் என்று சொன்னான் கணவன்.

'ஆத்தாடியோவ் நா மாட்டேன். பிறகு எம்மாதிரியே இருக்கப் போகுது பூனை' என்றாள்.

'அதெல்லாம்* நாய்க்குட்டிக்குத்தான் அப்பிடி; இது பூனை யில்லா. சும்மா நீயே ஊத்து.'

மஞ்சம்மாவின் புருஷனைக் கொஞ்சம் தந்திரக்காரன் என்றுதான் சொல்லவேணும்! பூனைக்குட்டியை அவள் பார்த்துக் கவனித்தால்

---

* நாய்க்குட்டி வீட்டுக்கு வந்ததும் பெரிய முன்கோபிகளைக் கூப்பிட்டுத்தான் முதல்முதலில் பால் ஊற்றச் சொல்லுகிறது ஒரு வழக்கம்.

தான் ஆயிற்று. இப்படி அவளைக்கொண்டு செய்வித்தால் அதன்பேரில் ஓரளவுக்கு ஈடுபாடு உண்டாகட்டுமே என்று நினைத்தான் அவன்.

ரொம்பப் பிரியமாக வற்புறுத்தியதின்பேரில் ரொம்பவும் பிரியக் கால் செய்து பாலைக் கொண்டுவந்து பூனைக்குட்டிக்கு வைத்தாள் மஞ்சம்மா.

தாய்ப்பாலையே இதுவரை குடித்துவந்த குட்டி, மாட்டுப்பாலை ஏனென்று பார்க்கவே இல்லை. குழந்தைகளுக்கு ரொம்பவும் ஏமாற்றம்.

பெரியவன் - 9 வயது - பூனைக்குட்டியின் முகத்தைப் பாலில் கொண்டுபோய் ஒட்ட வைத்தான்; 'டேய் மக்குப் பிளாஸ்திரி; இரு பேசாமல்.'

வெங்கிட்டி சொன்னாள் அப்பாவைப் பார்த்து, 'ஜீனி போட்டால் பால் சாப்பிடும்.'

'ஒன் தலை. பேசாமல் இருடீ.'

குழந்தைகள் பள்ளிக்கூடம் போவதைத் தாமதப்படுத்திக்கொண்டு நின்றன, அது எப்படிப் பால் சாப்பிடுகிறது என்று பார்த்துவிட்டு போகலாமே என்ற ஆவலில்.

பூனைக்குட்டியோ பால் சாப்பிடுகிறதாகவே இல்லை! அது பால் சாப்பிடாவிட்டாலும் பரவாயில்லை. பேசாமலாவது இருக்கக் கூடாதா, வாய் ஓயாமல் மியாவ் போட்டுக்கொண்டே இருந்தது. இந்த எளிய சத்தத்தைக் கேட்ட எலிகளின் கெச்சட்டம் கம்ப்ளீட்டாய் அடங்கிவிட்டது.

அந்த முட்டாள் எலிகள் இந்தக்குட்டி எப்படி நம்மைப் பிடிக்க முடியும் என்றுகூடத் தெரியாமல் ஓடி மறைந்துவிட்டன.

ஆரம்பத்தில் (குட்டி வந்த புதுசில்) மஞ்சம்மாவுக்கு அதன்பேரில் கொஞ்சம் பிரியம் இருந்தது வாஸ்தவம்தான். அவளுடைய கணவன் சதா பூனைக்குட்டியைப் பற்றியே கவலைப்பட்டுகொண்டும் அதைக் கவனித்துக்கொண்டுமிருப்பதைப் பார்த்த அவளுக்கு அதன்பேரில் எரிச்சல் உண்டாகத் தொடங்கியது.

அவன் பஞ்சில் பாலை முக்கி அதன் வாய் அருகே கொண்டு போனதும் அது பஞ்சைச்சுவைக்கத் தொடங்கியது. பஞ்சுவழியாகப் பால் அதன் தொண்டையை நனைத்தது. இப்படியாக அதைப் பழக்கிய ஒருசில நாட்களில் பூனைக்குட்டி நன்றாகப் பால் குடிக்கவே ஆரம்பித்துவிட்டது. குழந்தைகளுக்கானால் ஒரே குஷி.

கணவனும் குழந்தைகளும் இப்படிப் பூனைக்குட்டியைச் சீராட்டுவது மஞ்சம்மாவுக்கு அடியோடு பிடிக்காததோடு அந்தக் குட்டியை அவள் என்ன காரணத்தாலோ தனது எதிரிபோல் நடத்த ஆரம்பித்தாள்.

கணவன் வெளியூரிலிருந்து வந்ததும் முதல்காரியமாக, சட்டை யைக் கழற்றிக்கொண்டே 'பூனைக்குட்டி எங்கே? எப்படி இருக்கு அது?' என்று கேட்பான்.

அவனது ஆவலை அவள் சிறிதும் சட்டை செய்யாமல் பூனைக் குட்டியின்பேரில் பல பழிகளைச் சுமத்துவாள்.

'அரங்கு வீட்டுக்குள் போகமுடியலை; மூக்கைப் பிடித்துக் கொண்டுதான் போகணும், சனியன்.'

'அதனாலென்ன, குட்டிதானே; அப்படித்தானிருக்கும்.'

அவள் உடனே இரண்டாவது பாணத்தை எடுப்பாள்.

'நேத்துத் தெரியுமோ சங்கதி. குழந்தையை அது நல்லா பறண்டி கிச்சிவிட்டது கையிலே'.

'ஐயோ, அப்புறம்?'

(மஞ்சம்மாவுக்குக் கொஞ்சம் வருத்தம்தான். எந்தக் குழந்தைக்கு என்று கேட்க வேண்டாமோ, உடனே மனுஷன்! அவனுக்கு மற்ற இரு ஆண்குழந்தைகளையும்விட வெங்கிட்டியின்பேரில்தான் உயிர். அதை வைத்துக்கொண்டு தனது காரியத்தைத் தொடங்கலாம் என்று நினைத்தாள் அவள், 'இருந்தாலும் மனுசனுக்கு இம்புட்டு நிதானம் வேண்டியதில்லை')

'அய்யோ அப்புறம்' என்று அவன் சொன்னமுறையும் திடுக்கிட்ட மாதிரியும் ஏதோ ஒரு சம்பிரதாயமாகவே பட்டது அவளுக்கு. சொல்லப்போனால் உண்மையும் அதுதான். அவள் சொல்வது மிகை என்றும், பூனையை அவளுக்கு இப்பொழுது வள்ளிசாகப் பிடிக்கவில்லை என்பதையும் தெரிந்து வைத்துக்கொண்டான் அவன்.

## 3

மஞ்சம்மாவின் புருஷனுக்கு வெளியூரில் ஒரு நண்பன் உண்டு. சிறுவயசு முதலே அவர்களுக்குள் ரொம்ப அன்யோன்யம். அந்த நண்பனுடைய வீட்டுச் சமையல் அவ்வளவு ருசியாக இருக்கும். மஞ்சுவுக்கு கலியாணமான புதுசில் இவன் தன்னுடைய நண்பனின் வீட்டுச் சாப்பாட்டைப்பற்றி அடிக்கடி புகழ்ந்து சொல்லிக்கொண்டிருப்பான், அவளும் அப்படியா அப்படியா என்று அதிசயத்தோடு கேட்டு மகிழ்வாள். அந்தமாதிரி சமைத்துப் புருஷனுக்குத் தானும் படைக்க விரும்பினாள்.

மாட்டுக்கார சுப்பையாவிடம் கோடியான ஒரு பச்சைப் பாம்பைப் பிடித்துக்கொண்டு வரச்சொல்லி அதன் வாலைப் பிடித்து* உருவிவிட்டாள், என்றாலும் இதனாலெல்லாம் அவளுடைய கைப் பாகம் மணம் பெற்றுவிடவில்லை.

சந்தர்ப்பம் ஏற்பட்டபோது இவர்கள் அந்த நண்பனுடைய ஊருக்குப் போனார்கள், இந்தப் பிரயாணத்துக்குச் சாமர்த்தியமாக ஏற்பாடு செய்த பெருமை முக்கால்வாசி மஞ்சம்மாவுடையதுதான்.

அந்த வீட்டுச் சாப்பாடு, சொன்னமாதிரி நன்றாகத்தான் இருந்தது. ஆனாலும் மஞ்சம்மா ராத்திரி அவனிடம் தனிமையில் பேசிக் கொண்டிருக்கும்போது சொன்னாள்: 'என்ன போட்டு பிரம்மாதப் படுத்தினீகளே, என்ன சாப்பாடு, எல்லாம் நம்ம வீட்டுச் சாப்பாடு மாதிரிதான் இருக்கு;' என்று சுருக்கமாய் முடித்துவிட்டாள்.

---

* பச்சைப் பாம்பின் வாலைப் பிடித்துப் பெண்கள் உருவிவிட்டால் அவர்களுடைய சமையல் மணமாக அமையும் என்பது ஒரு நம்பிக்கை.

'அட ராமச்சந்திரா' என்று மனசுக்குள் சொல்லிக்கொண்டான் அவன்.

பெரும்பாலான பெண்பிள்ளைகளைப்போல மஞ்சம்மாவும் தலைக்குச் சவுரி வைத்துக்கொள்கிறவள்தான். ஆனாலும் மற்றவர்களுக்கு மத்தியில் சவுரி வைத்துக்கொள்ள நாணுவாள், தன் குடும்பத்துப் பெண் மூதாதைகளுக்கு இருந்த தலைமுடியின் அடர்த்தியையும் நீளத்தையும்பற்றி அவள் கதை கதையாய்ச் சொல்லி இருக்கிறாள்.

ஒருநாள் அருவித்துறையில் குளித்துக்கொண்டிருந்தபோது, இவர்கள் இருவருக்கும் ஒரே பேராச்சரியம் காத்துக்கொண்டிருந்தது. ஒரு பெண் நீராடிவிட்டுச் சொட்டச் சொட்ட நனைந்தபடி இவர்களைக் கடந்துபோனாள். அந்தப் பெண்ணை மஞ்சம்மா வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டிருந்தாள். அட ஏ அப்பா எவ்வளவு நீளமான தலைமுடி. அசல் முடி குதிங்கால்வரைக்கும் புன்னரசி மரத்தின் விழுதுகளைப்போல அவ்வளவு நீளம்.

அந்தக் கூந்தலாள் இவர்களுடைய பார்வையிலிருந்து மறைந்ததும் மஞ்சம்மா ஒரு பெருமூச்சுவிட்டாள்.

'மஞ்சு, எவ்வளவு நீளமான முடி, பாத்தியா!' என்று சொல்லி அதிசயப்பட்டான் அவன், மஞ்சம்மா புருஷனை ஒரு முழி முழித்துப் பார்த்தாள், பார்த்துவிட்டு 'என்னத்துக்கு இவ்வளவு நீளம், அனாவஸ்யமாய்' என்று வெடுக்கென்று பதில் சொன்னாள். சொல்லிவிட்டு, முகத்தைச் சாதாரணமாக வைத்துக்கொண்டாள்!

## 4

அன்று நல்ல நாளும் பொழுதுமாய் எல்லாரும் வீட்டிலிருந்தார்கள். குழந்தைகள் ஆனந்தமாய் விளையாடிக்கொண்டிருந்தன.

இசை மாற்றிப் பதிக்கப்பட்டிருந்த செங்கல் தரையில் மூன்றாவது குட்டிப்பயல் 'பாண்டி' விளையாடிக்கொண்டிருந்தான். கால் சட்டையைக் கழற்றி எறிந்துவிட்டு ஆரஞ்சுக் கலரில் ஒரு சிறிய்ய அருவிக் கரைத் துண்டை வெறும் உடம்பில் பெரிய மனுஷன்மாதிரி வேஷ்டியாகக் கட்டிக்கொண்டிருந்தான். மஞ்சம்மா இடுப்பில் கைகளை வைத்து நின்றுகொண்டு அவன் கற்பனையாகத் தனக்குத்தானே மழலைத் தொனியில் பேசிக்கொண்டு விளையாடிக் கொண்டிருப்பதை முகத்தில் சிரிப்பை அமுக்கி அடக்கிக்கொண்டு பார்த்துக்கொண்டிருந்தாள். எந்த வினாடியும் அவள் அவன்மீது பாய்ந்து தூக்கி அணைத்து இறுக்கிக்கொள்ளலாம். தனக்குப் பின்னால் அம்மா குறுகுறுப்போடு நிற்பதை அந்தப் பயல் கவனிக்காமல் தன் போக்காயிருந்தான்.

இந்தச் சமயத்தில் மஞ்சம்மாவின் புருஷன் தோட்டத்தைச் சுற்றி பார்த்துவிட்டு வந்த அலுப்பில் 'அப்பாடா' என்று வீட்டுக்குள் நுழைந்தான். குட்டிப்பயல் 'வேஷ்டி' கட்டிக்கொண்டு குஷாலாய் விளையாடிக்கொண்டிருப்பதையும் பக்கத்தில் அவனுடைய அம்மா பொங்கிப் பூரித்துப்போய் நிற்கும் அந்தச் சூழ்நிலை தகப்பனையும்

வெகுவாகப் பாதித்தது. பாய்ந்து பயலைச் செந்தூக்காய்த் தூக்கி அவன் மேல் முத்தமாரி பொழிந்தான்.

மஞ்சம்மா பாய்ந்து அவனிடமிருந்து கோபத்தோடு குழந்தையைப் பறித்தாள். புருசனைப் பார்த்து 'ரொம்பத்தான் செல்லங்கொடுத்துக் குழந்தைகளை நீங்க கெடுத்துர்ரீக' என்று கண்டித்துச் சொன்னாள். சொல்லிவிட்டு, தன் கைக்குள் வந்த குழந்தையைப் பார்த்து முகம் மலரச் சிரித்தாள்.

திகைத்து நிற்கும் கணவனையும் மறந்து தாளமுடியாத ஆனந்தத் தினால் குழந்தையை உடம்பெங்கிலும் 'சப்பு சப்பு' என்று பெருத்த ஒலி எழ முத்தமிடுவதைச் சிவனே என்று பார்த்துக்கொண்டு நின்றான் அந்த மஞ்சம்மாளின் கணவன்!

♦

ஞானரதம், 8
1970